3rd April 1958]

SRI S. M. ANNAMALAI : பாகிஸ்தானிலிருந்து வரும் அகதிகளுக்கு உதவி செய்வதைப் போல, ஸிலோன், பர்மா அகதிகளுக்கும் உதவி செய்ய சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸிலோன், பர்மா அகதிகளுக்கும் இதே மாதிரி உதவி செய்யலாம். அவர்களும் இதே மாதிரி ஈடுபடவேண்டும்.

SRI V. SUBBIAH : அகதிகளாக இருக்கக்கூடியவர்களுக்கு பொருள் உதவி செய்வதோடு கூட அவர்கள் கைத்தொழில் செய்வதற்கு உதவியோ அல்லது விவசாயம் செய்வதற்கு நிலங்களோ கொடுக்கப்படுவதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவர்கள் வீடு கட்டிக்கொள்ளுவதற்கும், ஒரு தொழிலை தொடங்குவதற்கும் இம்மாதிரி கடன் வசதி கொடுக்கப்படுகிறது என்று சொன்னேன். குறிப்பாக ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட்டு, அதற்கு உதவ வேண்டுமென்று கோரினால் அதுவும் அப்போதைக்கப்போது கருதப்பட்டு வருகிறது.

*Spinning mills*

*** 531 Q.—SRI A. R. MARIMUTHU : Will the Hon. the Minister for Industries be pleased to state—**

**(a) the number of spinning mills started in 1957 ;**

**(b) the capital invested on them ; and**

**(c) the number of workers employed in them ?**

THE HON. SRI R. VENKATARAMAN : **(a) 27.**

**(b) Information is not available.**

**(c) 2,083 workers.**

SRI A. R. MARIMUTHU : சிறு கைத்தொழில் மூலமாக நம் நாட்டில் நூல் உற்பத்தி செய்ய முடியும். அதனால் அதிகமான பேர்களுக்கு வேலை கிடைக்கும். ஆகவே அதிக முதலீட்டில் பெரிய தொழிற்சாலைகள் ஆரம்பிப்பதை நிறுத்திவிட்டு, குறைந்த முதலீட்டில் அதிகமான பேர்களுக்கு வேலை கிடைப்பதற்கு வசதியாக, சிறு தொழில்கள் மூலம் நூல் உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த மான்யக் கோரிக்கை இன்னும் சிறிது நேரத்தில் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும். அப்பொழுது அங்கத்தினர் தன்னுடைய அபிப்பிராயத்தை தெரிவித்துக்கொள்ளும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : 1955-ம் வருடத்திலே நூல் உற்பத்திக்கும், துணி உற்பத்திக்கும் மற்ற ராஜ்யங்களைவிட விகிதாசாரத்தில் நூல் உற்பத்தி அதிகமாக இருந்ததனால் துணி உற்பத்தியை அதிகப்படுத்துவதற்கு ஏன் முயற்சி செய்யவில்லை ?

MR. SPEAKER : இந்தக் கேள்விக்கும் மூலக் கேள்விக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? கனம் மந்திரி அவர்கள் சொன்னது போல் இண்டஸ்டிரீஸ் மான்யம் சிறிது நேரத்தில் விவாதத்திற்கு வரும். அப்பொழுது இதைப் பற்றி பேசலாம்.

*Most Backward Classes*

* 532 Q.—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether any legal opinion has been obtained with regard to the extension of the concessions, which have been granted to

Harijans in the matter of admission to Arts and Professional Colleges and appointment to posts in Government Services, to the Most Backward Classes; and

(*b*) if so, what it is?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The matter is being examined, **Sir.**

(*b*) Does not arise.

### *Prohibition*

*** 533** *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the number of cases tried under the Madras Prohibition Act (i) in the North Arcot district, and (ii) in each of the other districts from 1952 to 1957; and

(*b*) the number of persons belonging to the depressed classes and the number of caste Hindus involved in them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Statements giving the number of prohibition cases tried from 1952 to 1957 district-wise and the number of persons belonging to the depressed classes and the caste Hindus involved in them are placed on the table of the House.

**SRI V. K. KOTHANDARAMAN** : 1952-ம் வருஷம் முதல் 1957-ம் வருஷம் வரையில் கொடுத்திருக்கும் புள்ளி விவரங்களை பார்க்கும்பொழுது மதுவிலக்கு கேஸ்கள் அதிகரித்துக்கொண்டே போகிறது. அதே நேரத்திலே தாழ்த்தப்பட்ட மக்கள் மீது போடப்பட்ட கேஸ்கள் பெருவாரியாக இருக்கின்றன. குறிப்பாக, கோயம்புத்தூர் ஜில்லாவில் போடப்பட்டிருக்கிற கேஸ்களில் தாழ்த்தப்பட்ட மக்களின் பேரில் போடப்பட்ட கேஸ்கள் 50 சத விகிதத்திற்கு மேல் இருக்கின்றன. அதேபோன்று வட ஆற்காடு ஜில்லாவில் 35 சத விகிதத்திற்கு மேல் இருக்கின்றன. ஆகவே, வேண்டுமென்றே ஏழை மக்கள் மீது இது போன்ற கேஸ்கள் போடப்படுகின்றன என்பதை சர்க்கார் உணருமா ?

**MR. SPEAKER** : இந்தக் கேள்வி 'அவுட் ஆப் ஆர்டர்'. கேள்வி நேரத்தில் 'இன்ஸினுவேஷன்' கூடாது. மந்திரி அவர்கள் பதில் சொல்லுவதாயிருந்தால் எனக்கு ஆட்சேபனை இல்லை.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : மதுவிலக்கு குற்றங்கள் பற்றி நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதில் எப்போதும் கனம் அங்கத்தினருக்கு புகார் உண்டு. ஆனால் ஒரு சட்டம் ஏற்பட்டு, அந்த சட்டத்தை மீறினால் நடவடிக்கை எடுத்துக்கொள்ளுவதை தடுக்க முடியாது. எந்த இனத்தைச் சேர்ந்தவரானாலும் சரி, யாராயிருந்தாலும் சரி, குற்றம் செய்தவர்கள் பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

SRI T. T. DANIEL : From the paper placed on the table of the House, we find that the number of persons belonging to the backward and depressed classes is steadily increasing from year to year so far as Prohibition cases are concerned. May I know from the Hon. Minister whether the Government have actually gone into the question to find out the reasons for such increase in their number

---

a Printed as Appendix I on pages 114–115 infra.